3rd March 1958]

(b) The children of such teachers employed in secondary schools get full-fee concession up to Form III and half-fee concession from Form IV to VI. The difference in treatment has been necessitated by the policy of conferring certain benefits to low paid employees of **elementary** schools and encouraging teachers to take up work in elementary schools.

**Sri N. K. PALANISAMI** : ஒரே கிரேடிலிருக்கும் உபாத்தியாயர்களுடைய குழந்தைகளுக்கு ஒரேவிதமான கல்விச் சலுகை கொடுப்பதில் என்ன கஷ்டம் இருக்கிறது ?

**The Hon. Sri C. SUBRAMANIAM** : சலுகை கொடுப்பதிலே கஷ்டம் என்னவென்றால் பணக் கஷ்டம் தான். அதுவும் தவிர, செகண்டரி கிரேடு பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் ஆரம்பப் பள்ளிகளிலே போய் வேலை செய்யும்போது, அவர்களுக்கு ஒரு தூண்டுதல் காட்டவேண்டுமென்பதற்காக அவர்களுடைய குழந்தைகளுக்கு 6-வது படிவம் வரை முழுச் சம்பளச் சலுகை கொடுக்கப்படுகிறது.

Mr. SPEAKER : Questions are over.

[*Note.*—**An asterisk (*) at the commencement of a speech indicates revision by the Member.**]

## II.—ANNOUNCEMENT BY THE HON. SPEAKER.

Mr. SPEAKER : I have to inform the House that under rule 155 (3) of the Assembly Rules, notices of cut motions should reach the Secretary, Legislature Department before 3 p.m. on Wednesday, the 5th March 1958. No exception will be made to this rule on any account.

## III.—GENERAL DISCUSSION ON THE BUDGET FOR THE YEAR 1958-59.

Mr. SPEAKER : இப்பொழுது ஆறு நாட்களுக்கு பட்ஜெட் மீது பொது விவாதம் நடத்தப்படும். மூன்று நாட்களுக்கு முன்னால் கூடிய பிஸினஸ் அட்வைஸரி கமிட்டியில், 8-ந் தேதியன்று கனம் ஸ்ரீ அண்ணாதுரை அவர்களும், கனம் ஸ்ரீ வி. கே. ராமசாமி முதலியார் அவர்களும், கனம் நிதி மந்திரி அவர்களும் கலந்துகொள்வதாகத் தீர்மானிக்கப்பட்டது. பாக்கி கட்சித் தலைவர்கள் எல்லோரும் 7-ந் தேதியன்று பேசுவார்கள். மந்திரி மார்கள் அவரவர்களுக்கு எப்பொழுது இஷ்டம் இருக்கிறதோ அப்பொழுது கலந்துகொள்ளலாம். இன்றையதினம் கனம் அங்கத்தினர் ஸ்ரீ எம். ஜகன்னாதன் அவர்களை விவாதத்தை ஆரம்பிக்குமாறு கேட்டுக்கொள்ளுகிறேன். ஸ்ரீ ஜகன்னாதன் அவர்கள் 20 நிமிஷங்கள் பேசலாம். அதற்குப் பிறகு கனம் அங்கத்தினர் ஸ்ரீ க. அன்பழகன் அவர்கள் 20 நிமிஷங்கள் பேசலாம். சாதாரணமாக கனம் அங்கத்தினர்கள் தங்களுடைய பிரசங்கத்தை 10 முதல் 20 நிமிஷங்களுக்குள் முடித்துவிட்டால் நன்றாக இருக்கும் என்பது என்னுடைய அபிப்பிராயம்.

**Sri K. R. NALLASIVAM** : பாயிண்ட் ஆப் ஆர்டர், ஸர். நிதி மந்திரி அவர்கள் உரையில் டி.டி.கே. அவர்கள் சம்பந்தமாக பேசியிருக்கிறார்கள். டி.டி. கே. அவர்கள் தகராறுக்குரிய முறையிலே தம்முடைய பதவியை ராஜீனாமா செய்திருக்கிறார்கள். அதைப்பற்றிய எல்லா விஷயங்களையும் நாம் இந்தச் சபையில் விவாதிக்கக்கூடிய ஒரு சூழ்நிலை இருந்து, நிதி அமைச்சர் அவர்கள் அதைப்பற்றி பிரஸ்தாபித்திருந்தால் ஆட்சேபனையில்லை. நிதி அமைச்சர் அவர்கள் குறிப்பிட்டிருக்கும் இது விஷயம் பற்றி நாம் விரிவாக விவாதிப்பதற்கு ஒரு சந்தர்ப்பம் கொடுக்கப்படுமா என்பதை கனம் சபாநாயகர் அவர்களிடமிருந்து தெரிந்துகொள்ள விரும்புகிறேன்.